श्रीवेङ्कटेश्वरप्राच्यग्रन्थमाला सं. ३६.

सम्पादकः – श्री प. वें. रामानुजस्वामी, एम्. ए.

श्रीः

# छान्दोग्योपनिषद्भाष्यम्

## श्रीरङ्गरामानुजमुनिविरचितम्

उपोद्धात आङ्गलानुवाद टिप्पणी सहितम्



## प्रथमो भागः

मूलमात्रम्—उपोद्धात टिप्पणी सहितम्



शिरोमणि तर्कार्णव पण्डितरत्न श्रीदेशिकदर्शनधुरन्धर पूर्वोत्तरमीमांसाप्रदीप-

उभयमीमांसावल्लभ उत्तमूर् ति. वीरराघवाचार्येण

सम्पादितम्

तिरुपति

श्रीतिरुमलै-तिरुपति देवस्थानमुद्रणालये

मुद्रितम्

१९५२

[ मूल्यम् रू. ८.

ஸ்ரீ ஃ

ஸ்ரீ பத்மாவதீ ஸமேத ஸ்ரீநிவாஸ பரப்ரஹ்மணே நம ஃ

உபய வேதாந்த க்ரந்த மாலை

# உபநிஷத்ஸாரம்

## சாந்தோக்யோபநிஷத்து

அடைவாகச் சாந்தோக்யோபநிஷத்தில் ஓதப்பட்டுள்ளவற்றைச் சுருக்கி வரைகின்றோம். ப்ரஸித்தங்களான பத்து உபநிஷத்துக்களில் இரண்டாவதான கேநோபநிஷத்து போலே ஒன்பதாவதான இந்தச் சாந்தோக்யோபநிஷத்தும் ஸாமவேதத்தைச் சேர்ந்தது. நான்கு வேதங்களுக்குள் ஸாமவேதத்திற்கே சாகைகள் அதிகம். 'ஸஹஸ்ரம் ஸாமசாகா ஃ' என ப்ரஸித்தியன்றோ. ஒவ்வொரு சாகைக்கும் கடைசியில் உபநிஷத்துண்டாம். கேநோபநிஷத்து என்பது தலவகார ப்ராம்மணத்தைச் சேர்ந்ததெனக் கீழே கூறப்பட்டுள்ளது. இச்சாந்தோக்யோபநிஷத்தானது தாண்டிசாகையின் கடைசிப் பாகமான உபநிஷத்து. வேதவ்யாஸரென்னும் பாதராயண மாமுனிவர் பிரம்மஸூத்திரத்திற் கையாண்ட வுபநிஷத்துக்களிலே இதுவே முதலிலிருந்து கடை வரைக்கும் அதிகமாக வெடுத்தாளப் பெற்ற உபநிஷத்து என இதற்கொரு பெருமையைக் கூறலாம்.

எம்பெருமானைப் பெறப் பல துறைகள் இதில் ஓதப்பெற்றுள்ளன. பக்தி மார்க்கங்களான உபாஸநா முறைகளை விதிக்கப் புறப்பட்ட இவ் வுபநிஷத்தானது முதன்முதல் தான் ஸாமவேதத்தைச் சேர்ந்த தாகையாலே ஸாமகானத்தின் ஓர் அம்சமான உத்கீதமென்பதை முதலில் எடுத்து, அதிலும் ஏனைய வுபநிஷத்துக்கள் போலவே தானும் ப்ரணவ மந்த்ரத்தை ப்ரதானமாக வாதரித்து ஸாமத்தின் சேர்க்கைக்குத் தக்கவாறு உத்கீதத்திற் குட்பட்டுள்ள ப்ரணவத்தை முன்ன மெடுத்து அதில் அநேகம் உபாஸநங்களை ஓதி, பிறகு உத்கீத பதம், ஸாம பதம், ஸாமப் பொது, அதன் அம்சங்கள், அதன் உட்பிரிவுகள் இவைகளை யெடுத்துக்கொண்டு ஆங்காங்கு உபாஸந வகை

கள் சில வருமவற்றைக் காண்பித்து, இப்படி ஐஹிகம் ஆமுஷ்மிகம் என்ற பல பலன்களுக்கான உபாஸநங்களை முடித்து மோக்ஷத்திற்காக வரும் பக்தியோகங்களை மேலே வோதுகின்றது.

இவ் வுபநிஷத்து எட்டு ப்ரபாடகங்களாகப் பிரிக்கப்பட்டிருக்கிறது. ப்ரபாடகமாவது அத்யாயம். ஒவ்வொரு அத்யாயத்திற்கும் அநேகம் கண்டங்கள் உள.

முதலிரண்டு ப்ரபாடகங்களில் ஸாமவிஷயமாகப் பல த்ருஷ்டியுபாஸநங்கள் விதிக்கப்படுகின்றன. த்ருஷ்டியாவது ஒன்றை மற்றொன்ருகப் பார்ப்பது. உலகில் உயர்ந்ததைத் தாழ்ந்ததாகவும், தாழ்ந்ததை உயர்ந்ததாகவும் பார்ப்பதுண்டு. ஒரு வஸ்து நமக்கு வேண்டாமெனத் தோன்றினல் அதை ஒரு உபயோகமற்ற வஸ்துவாக, அதாவது தாழ்ந்ததாகப் பார்ப்பதும், எந்த வஸ்துவைக் கொண்டு நாம் ஒரு பலனைப் பெற விரும்புகிறோமோ, எதில் நமக்குக் கொஞ்சமாவது ஆதாம் இருக்கிறதோ, அதில் நமக்குக் கௌரவ புத்தியும், அதை நாம் அபேக்ஷிக்கும் பலனுக்குத் தக்கபடி உயர்ந்ததாகப் பார்ப்பதும் அனுபவத்திலுள்ளவையாம். ஓர் அரசனைக் கொண்டு ஏதேனும் த்ரவ்யம் கிடைக்குமென்று நினைக்கிறபோது, அவன் குபேரனென நமக்குத் தோன்றுகிறது. அவனைக் கொண்டு நமக்கு விரோதிகளாயிருப்பாரை நலிய நினைக்கிறபோது அவன் காலாந்தகன் என்கிறோம். காமிநிகளான ஸ்திரீகள் அவனையே மன்மதனென்கிறார். தர்ம ஸ்தாபனையி லீடுபட்டிருந்தால் ஸாக்ஷாத் ராமனென்பர். இப்படியுள்ள பழக்க வழக்கத்தை யநுஸரித்தே சிற்சில விடங்களில் சிற்சில த்ருஷ்டிகளையும், அவ்வித பார்வையோடு உபாஸநம் செய்தால் அதனல் தகுந்தாற்போல் பலன்கள் ஸித்திக்கிற வகையையும் எல்லா உபநிஷத்துக்களும் கூறும். அவ்வண்ணமே இவ்வுபநிஷத்தும் ஸாம வேதத்தைச் சேர்ந்ததானபடியாலே ஸாமகாந விஷயமாகப் பல த்ருஷ்டிகளை யுபதேசித்துத் தக்க பலனையும் கூறுகிறது.

ஸாம என்னப்படும் வேதகாநமானது ருக்குகளில் கானம் பண்ணப்படும். ஒவ்வொரு ருக்கிலும் கானம் பண்ணப்படும்போது அந்த கானத்தை ஐந்து பாகங்களாகப் பிரிப்பர்கள். தொடக்கத்தில் ஹிங்காரம்; பிறகு ப்ரஸ்தாவம், பிறகு முக்யமாயுள்ள உத்கீதம், பிறகு ப்ரதிஹாரம், முடிவில் நிதநமென் வாம். ஏழு பிரிவுகளைக் கொள்வதுமுண்டு. அப்போது ஹிங்காரம், ப்ரஸ்தாவம், ஆதி, உத்கீதம், ப்ரதி

ஹாரம், உபத்ரவம், நிதனமெனச் சொல்வர். உத்கீதத்தினுள் முதன் முதலுள்ள ப்ரணவத்தை ஆதியென்றும், நிதனத்தை முன்பாகம் பின்பாகமாகப் பிரித்து உபத்ரவம், நிதனம் எனவும் சொல்வதாகக் கொள்க.

இப் பிரிவுகளில் ஏதேனுமொன்றை யெடுத்து அதனைப் பலனுக்குத் தகுந்ததொரு வகையிலே ஓர் உயர்ந்த வஸ்துவாகப் பார்ப்பதை முதல் ப்ரபாடகம் ஓதுகிறது. ஒன்றை ஒன்ருக நம் இஷ்டப்படி நினைத்தாலே பலன் கிடைத்துவிடாது. அதுவும் வேத சோதின வகையிலேயே யாகவேண்டும். முக்யமான பக்திமார்க்கங்கள் மூன்ரும் ப்ரபாடகத்தினின்றே பெரும்பாலும் அறியப்படும்.

1, 1. முதற்கண்டம் உத்கீத பாகமான ப்ரணவத்தை யொரு விதம் உபாஸிக்கச் சொல்லுகிறது. அதற்காக உத்கீதம் தான் உலகில் ஸாரமான தென்கிறது. சராசரங்களான ப்ராணிகள் எல்லாம் ஜீவிக்கத் தங்குமிடமாகையாலே பூமியை ஸாரமென்பர். அதற்கும், அதனுல் விளையும் பலன்களுக்கும் மூலமாயிருப்பதாலே அதிலும் ஸாரம் ஜலம். அதனுலுண்டான ஓஷதிகள் அதற்கு மேல் ஸாரம். அவற்றைப் புசித்துண்டு பண்ணப்பெறும் மானிட வுருவம் அவற்றினும் ஸாரம். இவ் வுருவத்தில் வாக்கு ஸாரம். வாக்குக்களில் (ऋक्) ருக்கு என்பது ஸாரம். அதற்குமேல் சிறப்பாயிருப்பது ஸாமகாநம். அதிற் சிறந்தது உத்கீத மென்கிறது. இதனுல் பூமியிற் பிறவியென்ருல் மனிதப் பிறவியே சிறந்ததென்றும், அதில் கற்க வேண்டியவற்றில் உத்கீதத்தைக் கற்பதே யுயர்ந்ததென்றும் குறித்த படியாம். இப்படி யுத்கீதம் உத்க்ருஷ்டமான பதவியைப் பெற்றிருப்பதையும், அது, வாக்கு ப்ராணன் என்றதொரு மிதுனத்தின் சேர்க்கையானபடியாலே காம பூர்த்தி யளிப்பதென்றும், ப்ராணவமானபடியாலே, ப்ரணவம் ஸம்மதியைக் குறிக்கும் எழுத்தானதாலே, உலகில் ஸம்ருத்தியுள்ளவரே ஏதேனும் அபேக்ஷித்தால் ஸம்மதியளிப்பவராகையாலே, ஸம்ருத்தி யென்ற குணமும் இங்கே பாவிக்கப்பட வேண்டுமென்றும் சொல்லிற்று. உபாஸநமிராமற் கர்மங்களைச் செய்தால் அவையும் பயனளிப்பவையாஞலும் உபாஸநத்தோடு செய்தபோதுள்ள வீர்யம் அப்போது கிடையாது. ஆக உபாஸநமென்பது கர்மங்களால் வரும் பலன்களுக்கு ஏதேனுமொரு காரணத்தால் இடையூறுண்டாகுமாகில் அதை விலக்கி விரைவில் அவற்றைப் பெறும்படி செய்கிறதென

உபாஸனத்திற்குள்ள பெருமையைப் பொதுவிலே கூறிற்று. இங்ஙனம் முதல் ப்ரபாடகத்திலுள்ள முதற் கண்டத்தின் சுருக்கமாகும்.

2. இவ் வுத்கீதத்தை வேறு இந்திரியங்களைப் போலப் பார்க்காமல் அவற்றிற்கு மேலான முக்ய ப்ராண வாயுவாகப் பார்த்து உபாஸிப்போர்க்கு விரோதிகள் அழிவது பலன். உத்கீதத்தைப் பல ரிஷிகளின் பெயரிட்டழைப்பதும் காண்க.

3. இதனையே ஸூர்யனாகவும் ப்ராணனாகவும் பாவிப்பதையும், வ்யானவாயுவாகப் பார்ப்பதையும் சொல்லி, உத் - கீ - த- என்ற அக்ஷரங்களைப் பிரித்து அவற்றில் சில த்ருஷ்டிகளையும் பலனையும் கூறி, எந்த ஸாமகானம் செய்கிறானோ, அந்த ஸாமம், ருக்கு, ருஷி, தேவதை, சந்தஸ்ஸு முதலானவற்றையும், ஆத்மாவையும் த்யானம் செய்துகொண்டு ஸ்தோத்ரம் (ருக்கிலே கானம்) செய்தால் சீக்கிரம் சிறந்த பலன் உண்டு என்கிறது.

4. உத்கீத ப்ரணவத்தை அம்ருதம் அபயமென்னப்படும் ப்ரம்மமாக வுபாஸிக்கச் சொல்லுகிறது நான்காம் கண்டம். தேவதைகள் ம்ருத்யுவினிடமிருந்து பயந்து வேத வித்யையினுட் புகுந்து வைதிக மந்த்ரங்களாலே தங்களை மறைத்துக் கொண்டார்கள். அப்போதும் ம்ருத்யுவானவன் நீரில் மீன்களைக் காணுமா போலே வேதத்தில் மறைந்த தேவர்களை எளிதிற் கண்டுவிட்டான். பிறகு அவர்கள் அங்குநின்று அம்ருதமும், அபயமுமான ப்ரணவத்திலே புகுந்து நின்று ம்ருத்யுவினிடமிருந்து தங்களைக் காத்துக் கொண்டனர். ஆகவே இதை இங்ஙனம் உபாஸிப்பவனுக்கு ம்ருத்யுவுமில்லை, பயமுமில்லை யென்கிறது.

5. உத்கீதமும் ப்ரணவமு மொன்றெனநினைத்து அதைப் பல கிரணங்கள் நிறைந்த ஸூர்யனாகவும் பல ப்ராணன்களுக்கு (இந்திரியங்களுக்கு) ஆதாரமான ப்ராண வாயுவாகவும் த்ருஷ்டி செய்பவனுக்கும் பிள்ளைகள் பல பிறப்பர் என்று சொல்லி உத்கீத ப்ரணவங்களை ஒன்றாக நினைத்தற் குரியதொரு விசேஷத்தையும் குறித்தது.

6, 7. அங்கங்கள் பலவற்றைக் கூறி,—ஆதித்ய மண்டலத்தினுள்ளிருக்கும் ஹிரண்மய திவ்யமங்களவிக்ரஹனை புண்டரீகாக்ஷனாகவோ, நம் கண்ணைத் தனக்கிருப்பிடமாகவுமுள்ள அந்த எம்பெருமானாகவோ உத்கீதத்தை உபாஸிக்கலாம். அப்போது ருக்கு

களும் ஸாமங்களுமாகிற வைதிக கானங்களுக்கும் உலகில் வீணைதி களைக் கொண்டு செய்யுமெல்லா கானங்களுக்கும், ஸர்வாந்தராத்மா வாய், கோசாமாய், பாபங்களுக்கெல்லாம் புறப்பேயுள்ள அந்த ஸர்வே ச்வரனுடைய அனுக்ரஹத்தாலே ஆதித்ய மண்டலத்திற்கு மேலுள்ள உலகுகளும் தேவபோகங்களும், மண்ணுலகுக்குக் கீழுள்ள உலகும் மனுஷ்ய போகங்களும், அந்தந்த உபாஸனத்தின் பலனுகக் கிடைக்கு மென்றது. (கப்யாஸம் புண்டரீகம் என்ற வாக்யம் இங்கே யுள்ளது).

8, 9. இந்த உத்கீதத்திலே ஆகாசத்ருஷ்டியைச் சொல்லுகிற திங்கு. சிலகன், தால்ப்யன் ப்ரவாஹணன் என உத்கீதத்திலே தேற்ச்சி பெற்ற மூவரும் சேர்ந்து வாதம் செய்யத்தொடங்க, அவர் களில் ப்ரவாஹணன் என்ற அரசன் மற்ற இருவருடைய வாதங்களைக் கேட்க விரும்ப, அப்போது ஸாமத்திற்கு எது ஆதாரமென்று சில கன் வினவ, தால்ப்யன், ஸ்வரம் ப்ராணன் அன்னம் ஸ்வர்க்கம் என்றவற்றை மேன்மேல் ஆதாரமாகக் கூறி ஸ்வர்க்கத்திற்கு மேற் பட ஆதாரமில்லை யென, அதற்கும் ஆதாரம் பூலோகம் என சிலகன் சொன்னன். இதைக் கேட்ட ப்ரவாஹணன் இவ் வாதாரங்கள் எல் லாம் அழிவுறுவன வாகையாலே, இங்ஙனம் கொள்ளில் ஸாமம் அழிவுறுமாகையாலே அழிவற்றதாய் ஸர்வபூதங்களின் பிறப்புக்கும் அழிவுக்குமிடமாய் உயர்ந்ததான ஆகாசமே (பரமாத்மாவே) ஆதாரம் என முடிவாகக் கூறினன். இவ் வாகாசமாக உத்கீதத்தைப் பார்ப் பவனுக்கு உயர்ந்த ஜீவனமும் உயர்ந்த உலகங்களு முண்டென்றது.

10, 11. கல்மழையினலடிபட்ட குருதேசத்திலே யானையேறி கள் இருந்த வொரு க்ராமத்திலே உஷஸ்தி யென்ற முனிவர் தம் மோடுகூடவே திரிந்துவரும் தம் சிறு பிராய மனைவியோடு ஆஹார மற்று வருந்தி வஸித்துவந்தார். அவர் குல்மாஷம் என்ற தானி யத்தை உண்டுகொண்டிருந்த ஒரு யானையேறியை யண்டி கேட்க, அவனும், நான் உண்பதற்கு வைத்து உண்டுவருமிதல்லது வேறில்லை யென, அவரும் அதிலே கொஞ்சம் கேட்க, அவனும் அதையும் அத் துடன் அருந்தும் தண்ணீரையும் கொடுக்க, அவர் தண்ணீரை, 'எச்சில் இது; வேண்டா' மென்றார். இதுவும் எச்சில் தானே யென்றனவன். இதை யுண்ணுவிடில் எனக்கு இப்போது பிராணன் நிற்காது; பிழைத்த பிறகுத் தண்ணீர் அருந்துவது காமசாரமாகையாலே சாஸ்திரத்தை மீறினதாம் என அவனுக்கு மறுமொழி கூறி, வாங்கின குல்மாஷத்தில்

கொஞ்சம் உண்டு கொஞ்சம் மனைவிக்கும் கொடுத்தார். அவள் ஏற்கனவே உண்டிருந்தபடியாலே அதை வாங்கி வைத்திருந்தாள். இரவில் நித்திரை செய்து எழுந்து அவ் வுஷஸ்தி முனிவர் 'ஏதேனும் கொஞ்சம் ஆஹாரமிருந்தால் பார்த்துக்கொண்டு பணத்திற்கு வழி தேடலாம். அருகில் அரசன் ஒருவன் யாகம் செய்யப் போகிறான். அவன் அங்கே செய்யும் எல்லாத் தொழில்களுக்கும் நம்மை முக்கியமாய் வரிப்பான்' என்று மனைவியிடம் சொன்னார். அவளும் முதனாள் வைத்திருந்த குல்மாஷத்தைக் கொடுக்க அவர் அதை உண்டு யாகத்திற்குச் சென்றார். அங்கு, ப்ரஸ்தாவம், உத்கீதம் ப்ரதிஹாரம் என்ற ஸாமாம்சங்களுக்காக ஏற்பட்டுள்ள ரித்விக்குகளிடம் சென்று அதற்குள்ள தேவதையை யறிந்து கானம் செய்ய வேணுமென்றார். பிறகு அரசன் இவரை இன்னாரென்று தெரிந்துகொண்டு, இவரை விசேஷமாக ஸத்கரித்து. இவரையே அவர்களின் ஸ்தானத்தில் நிறுத்தி நடத்த நினைக்க, இவர் அவர்களுக்கே தத்துவோபதேசம் செய்து யாகத்தை நடத்தி வைத்தார். இவர் உபதேசித்த முறையாவது—"ப்ரஸ்தாவம் என்ற ஸாமகானத்திலே ஸர்வ பூதங்களுக்கும் பிறவி யழிவுகளுக்குக் காரணமாயுள்ள ப்ராண (பரமாத்ம) தேவதையையும், உத்கீதத்திலே, உயரத்திலிருப்பவனும் புகழப்படுபவனுமான ஆதித்யனையும், ப்ரதிஹாரத்தில் அன்னத்தையும் பாவிக்க வேண்டு" மென்றபடியாம்.

12. அன்னத்திற்கு அலைந்த உஷஸ்தியின் உபதேசம் முடிந்தவுடன் அன்னத்தைப் பெறச் செய்யக்கூடும் சௌவோத்கீத மெனவோர் உத்கீதத்தைச் சொல்லுகிறது. (வக) பகரென்ற ரிஷிக்கு இந்த உத்கீதத்தை யுணர்த்துவதற்காகப் பலர் நாய்களாக உருவெடுத்து இதைக் கானம் செய்து காண்பித்தனர் என விங்கே விளங்கும்.

13. ருக்குகளில் ஸாமகானம் செய்யும்போது சிற்சில விடங்களில் சிற்சில புதிய அக்ஷரங்கள் இசையின் பொருத்தத்திற்காகப் புகுத்தப்படும். அவை ஸ்தோபா (மா)க்ஷரங்க ளெனப்படும் "ஹாஉ, ஹாஇ" முதலானவை. இவைகள் பதின்மூன்றைச்சொல்லி இவற்றை ப்ருதிவி முதலிய சிலவாகப் பாவித்தற்குப் பலன் வாக்கும் அன்னமும் என்றது.

2. 1—10. இப்படித் தனித் தனியே உத்கீதம் முதலிய ஸாம பக்திகளில் உபாஸநங்கள் சொல்லப் பெற்றன. இனி இரண்டாம் ப்ரபாடகத்திலே மொத்தமாக எடுத்துச் சில உபாஸனங்கள் போதிக்

கப்படுகின்றன. ஸாமமே ஸாதுவானது என வோர் உபாஸனத்தை முன்பு சொல்லிப் பிறகு ஸாமத்தின் பக்திகளாகக் கீழே குறிக்கப் பெற்ற ஹிங்காராதிகள் ஐந்து, ஏழு வென்ற இரு வகைகளில் ஐந்து பக்திகளிற் பல உபாஸநங்களும், ஏழு பக்திகளைச் சேர்ந்த ஆதித்யோ பாஸநமும் அதற்கு மேலான அதிம்ருத்யூபாஸநமும் சொல்லப்பட் டன. கீழ் உலகம் மேலுலகம் எனப் பலவுலகங்கள் ஒன்றுக்கொன்று உபகாரமாயிருக்க அமைக்கப்பட் டிருப்பதாலே மழை பெய்து எங்கும் நீர் நிரம்பி வஸந்தம் முதலிய ருதுக்கள் அவ்வவ காலத்திற் பலித்துப் பசு முதலிய ப்ராணிகள் ஸுகித்து இருக்க, இங்ஙனம் எல்லா ஸௌகர்யங்களும் பெற்ற முமுக்ஷுவானவன் உபாஸித்துச் சிறந்த பலன்களைப் பெறுகிறானென்பது இப் பாகத்தின் உட்கருத் தாம்.

11—20. பிறகு தனித் தனியே சில ஸாமங்களை யெடுத்து ஆயுள், ஆரோக்யம், ப்ரஜை, பசு, யசஸ்ஸு இவைகளுக்காக ஏதேனு மொரு ஸாமத்தில் ஐந்து உட்பிரிவுகளில் சிற்சில த்ருஷ்டிகளை விதித்தது.

21, 22. இங்ஙனம் ஸாமத்தின் உட் பிரிவுகளிலே சொன்ன வுபாஸனங்களுக்கெல்லாம் மேற்பட்டதாய் மூவுலகும் அவற்றின் தேவதைகளும், அவர்களிடம் வெளியான வேதங்களும், மற்றும் எல்லாமிது என்றதொரு த்ருஷ்டியைச் செய்யும் வண்ணமுரைத்து இதை யுபாஸிப்பவனை உலகெல்லாம் ஆராதிக்கும் என்றது. பிறகு ஸாமஸ்வரங்களில் எவை ஏற்கக் கூடியவை, வர்ணங்களை எங்ஙனம் உச்சரிப்பது, அவற்றின் தேவதைகள் யாவரென்பதை விளக்கிற்று.

23, 24. இனி ப்ரணவத்தின் பெருமையைப் பேசப் புகுந்து எல்லா ஆச்ரமங்களையும், எந்த வாச்ரமத்திலும் பாப்ரம்ம த்யான முள்ளபோது மோக்ஷ முண்டென்பதையும், மூவுலகையும் படைத்து அவற்றினின்று பிறந்த வேதங்களிலிருந்து வந்த வ்யாஹ்ருதிகள் மூன்றினின்று ப்ரணவம் வந்ததாகையாலே இலைகளில் நரம்புகள் போல எல்லா வாக்குகளிலும் ப்ரணவம் பரவி யிருக்கிறதென்றது. பிறகு மூவுலகும் யாகம் செய்பவனுக்குக் கிடைப்பது ஸோமயாகத்தி லுள்ள மூன்று ஸவநங்களுக்கும் அதிபதிகளான வஸு ருத்ர ஆதித்யர் களைப் பற்றின ஸாமங்களைச் சொல்லி அவர்களைப் புரஸ்கரிப்பதாலே யென்றது. இங்ஙனம் இரண்டு அத்யாய (ப்ரபாடக)ங்கள் போயின

3. 1—11. மூன்றாம் அத்யாயம் முதலாக, மோக்ஷத்திற்காக நோக்கவிருக்கும் வித்யைகள் பல ஓதப்படுகின்றன. முதன் முதல் மதுவித்யை. ஸூர்ய மண்டலத்தைத் தேவதைகளுட்கொள்ளும் தேனாகவும் மரத்தில் தேனடை யிருக்குமா போலே மேலுலகில் அந்தரிக்ஷமெனப்படும்தேனடை யிருப்பதாகவும், வண்டுகள் புஷ்பங்களிலிருந்து தேன்களை யெடுத்துச் சேர்க்குமாபோலே அந்தந்த வேத மந்த்ரங்கள் தங்களைச் சொல்லிச் செய்யப்படும் யாகம் முதலியவற்றிலிருந்து யசஸ்ஸு, தேஜஸ்ஸு, இந்திரியம், வீர்யம் போன்ற பலன்களை யெடுத்து ஸூர்ய மண்டலத்தில் ஒவ்வொரு பக்கத்திலும் ஒருவாறு சேர்த்து வைத்திருப்பதாகவும் வஸு-ருத்ர-ஆதித்ய-மருத்-ஸாத்ய கணங்கள்என்ற ஐந்து கணங்களும் நான்கு திக்குகளிலும் மேற்புறமும் நின்று அதனைக் கண்டுகந்து வருகிறார்களென்றவாறும் தெளிந்து இத்தகைய தேனாக ஸூர்யனை த்யானம் செய்வதோடு அவனுக்கு அந்தர்யாமியான பரப்ரம்மத்தையும் உபாஸனம் செய்பவருக்கு முதலில் வஸுருத்ராதி போகமும் பிறகு மோக்ஷமும் ஸித்திக்குமென விதிலே ஓதிற்று.

12, 13. காயத்ரீ ப்ரஹ்ம வித்யை—நான்கும் ஆறும் கொண்ட காயத்ரியைப் போலே யுள்ளதாக ப்ரம்மத்தைப் பாவிக்க வேண்டும். காயத்ரீ சந்தஸ்ஸுக்கு மூன்று பாதங்களும் 24 அக்ஷரங்களும் பெரும்பான்மை யிருக்கும். 24 அக்ஷரங்களையும் அவ்வாறு அக்ஷரங்களாகப் பிரித்து நான்கு பாதங்களாகவும் சில காயத்ரிக்கு அமைப்பதுண்டு. அதனால் காயத்ரியை நான்கும் ஆறும் கொண்டதென்கிறது. ப்ரம்மத்திற்கு நான்கு பாதங்களாவன—பூதம், ப்ருதிவி, சரீரம், ஹ்ருதயம் என்பவை யென்றதிங்கே. வாக்கானது ஸர்வ பூதங்களையும் குறிப்பதும் காப்பதுமாயிருப்பதாலே ஸர்வ பூதமயமான ப்ரம்மத்திற்கும் வாக்கினால் குறிக்கப்படுவதும் காக்கப்படுவது முண்டாம். ப்ரிதிவியைப் பாதமாக வுடைய விதற்கு ஸர்வ பூதங்களுக்கும் ஆதாரமாயிருக்கை, அவைகளால் மீளமுடியாமை யென இரு குணங்கள் உண்டு. சரீரமாயும் ஹ்ருதயமாயுமுள்ள விந்த ப்ரம்மத்திற்கு ப்ராணன்களுக்கு ஆதாரமாயிருத்தலும் அவைகளால் மீளமுடியாமையு முண்டு. ஆக ஆறு அம்சங்களும் நான்கு பாதங்களு மிங்ஙனம் ப்ரம்மத்திற்குச் சொல்லப் பெற்றன. புருஷ ஸூக்தத்திற் சொன்னபடி ப்ரக்ருதி, வைகுண்ட மென்ற உபய விபூதிகளில் பரவியுள்ள விதற்கு இத்தகைய பாதங்களை வைத்து உபாஸநம் செய்

தால் அழிவறக் குறைவற விருக்கும் (மோக்ஷ) பலன் கிடைக்கு மென்கிறது. இதற்கு அங்கமாக, ஹ்ருதயத்தில் நான்கு பக்கங்களிலும் மேலுமாக ஐந்து குழிகள் இருப்பதாகவும் அவற்றில் ஐந்து ப்ராணன்கள் ஸஞ்சரிப்பதாகவும் அவ்வைந்து குழிகளிலும் ஐந்து த்வார பாலகர்கள் ஆதித்யன், சந்திரன், அக்னி, பர்ஜந்யன், ஆகாசம் எனப்பட்ட தேவதைகளிருப்பதாகவும் பாவிக்கச் சொல்கிறது.

எல்லா வுலகுக்கும் மேலான உத்தம லோகத்திலே இருக்கும் பரப்ரம்மமே உடலில் உண்பதை ஜரிப்பிக்க விருக்கும் வைச்வாநரனென்னும் அக்நிக்கு அந்தர்யாமி யெனக் கூறி அவனைப் பார்த்ததாகவும் கேட்டதாகவு முபாஸிப்பவன், எல்லோரும் பார்க்கும்படியும் கேட்கும்படியும் அழகும் கீர்த்தியும் பொருந்தி யிருப்பான் என்றது. அதனைப் பார்ப்பதும் கேட்பதும் எங்ஙனே யென்னில், உடலைத் தொட்டால் உஷ்ணம் தெரிகிறதே அதே அதைப் பார்த்தபடியாம்; காதுகளைக் கைகளால் மூடிக்கொண்டபோது உள்ளிருந்து ஒரு சப்தம் கேட்கப்படுகின்றதே, அதே அந்த ப்ரம்மத்தைக் கேட்டபடியாம்.

14. சாண்டில்யவித்யை. உலகெல்லாம் பிறப்பதும் பிழைப்பதும் அழிவதும் எதனாலோ, அந்த ப்ரம்மமே இவ்வுலகெல்லாமாம் என வறிந்து அதனாலே காம க்ரோதங்கள் நீங்கி சாந்தியுடன் உபாஸிக்க வேண்டும். ஏனெனில் உபாஸித்துப் பலன்பெற வேண்டியது புருஷனுக்குரியது. எங்ஙனம் இங்கு உபாஸிக்கிறானோ அங்ஙனம் பிறகு இவன் ஆவான். ஆகவே மனோமயன் ப்ராணசரீரன் என்றாற் போலுள்ள மஹா குணங்களோடு ப்ரம்மத்தை யுபாஸித்து யான் அதனைப் பெறுவன் என்ற உறுதியுடன் உபாஸிப்பவனுக்குக் கையிலிருப்பது அவ்வித ப்ரம்மத்தைப் பெறுவதாகிய மோக்ஷம் என்றனர் சாண்டில்யர்,

15. புத்திரன் தீர்க்காயுஸ்ஸாயிருக்க விரும்புவோன் செய்வதோர் உபாஸநம் மேலே கூறப்படுகிறது. இது கோச விஜ்ஞானமெனப்படும். இதில் வாயுவைத் திக்குகளின் மகனாக நினைக்க வேண்டும். சில மந்த்ரங்களும் இதற்குக் கூறப் பெற்றன.

16, 17. நூற்றிப் பதினாறு வருஷ காலம் நீடித்து வாழ விரும்புவோன் தன்னை ஒரு யஜ்ஞமாகப் பாவித்துத் தன் ஆயுஷ்காலத்தை மூன்றாகப் பாகம்செய்து அவ்வப்போது தன் ப்ராணன்களை அடைவே வஸு ருத்ர ஆதித்யர்களாக நினைத்து முறைப்படி உபாஸநம் நடத்

தினால் நோவற்று நீடித்து வாழ்வானென்றும் அந்திய காலத்தில் இவன் ஜபிக்க வேண்டிய மந்த்ரங்கள் உண்டென்றும் அதனால் இவன் பிறகு மோக்ஷம் பெறுகிறானென்று மோதிற்று.

18, 19. பிறகு மனது ப்ரம்மம், ஆதித்யன் ப்ரம்மமென த்ருஷ்டி யுபாஸனங்கள் ஓதப்பெற்றன.

4. 1–3. ஜாநச்ருதி யென்பவன் க்ராமம், நகரம், வழி, வநங்கள் முதலாக வெல்லா விடங்களிலும் எல்லோருக்கும் வீடுகளும் சத்திரங் களும் பலவகை அன்னபானங்களும் ஏற்படுத்தி எல்லா தானங்களை யும் ச்ரத்தையோடு நடத்திக் கொண்டு ஜநங்கள் எல்லோரும் கொண் டாடும்படி மஹா தர்மிஷ்டனாயிருந்தான். ஒரு நாள் இரவில் அவன் படுத்திருக்குமிடத்திற்கு மேலே வானத்தில் அன்னங்கள் பல பறந்து கொண்டிருக்க அவற்றின் முன்னே போகும் ஓர் அன்னத் தைப் பின்னே செல்லு மன்னம் பின் கண்டவாறு கூறிற்று. 'ஏனப்பா! உனக்குக் கண் இல்லையா. இவ் விரவையும் பகலாக்கும்படி யிருக்கும் ஜாநச்ருதியின் தேஜஸ்ஸின் மேல் துணிந்து செல்லுகி றாயே. உன்னை யது எரித்துவிடப் போகிறதே.'

முன்னே போகு மன்னம், 'என்ன வண்டியோடு திரிந்திருக் கும் ரைக்வரைப் போல் இவனைப் புகழ்கிறாயே' என மறுமொழி கூறினது.

'யாரவர் வண்டியோடிருக்கும் ரைக்வர்?'

'சூதாட்டங்களிலே பலவகை யாட்டங்களுண்டே. அவற்றில் க்ருதம் (க்ருத்) என்கிறதிலே மற்றவை யெல்லாம் அடங்கினாற் போலே அந்த ரைக்வர் அறிந்ததை ஒருவன் அறிந்தானாகில் அவனிடம் உலகத் திலுள்ளார் செய்யும் நற்செயல்களெல்லாம் அடங்கிவிடும். (அதை யறியாத இந்த ஜாநச்ருதிக்கு ரைக்வரைப் போன்ற பெருமை கூட வுண்டோ) அப்படி செய்யத் தகுந்த மஹான் அந்த ரைக்வரெனத் தெளிக'.

இங்ஙனம் அன்னங்களின் பேச்சை அருகிலே படுத்திருந்து கேட்ட ஜாநச்ருதியானவன் படுக்கையிலிருந்து எழுந்தவுடனே தன் அந்தப்புரக் காவற்காரனை யழைத்து அன்னங்கள் சொன்னதைச் சொல்லி ரைக்வரைத் தேடி வா என்றனுப்ப அவனும், 'எங்கும் காண வில்லேன்' என்று வந்து விண்ணப்பிக்க, 'ப்ராம்மணர்கள் இருக்கு மிடம் போய் பார்த்து வா' என அவன் ஆஜ்ஞாபிக்க, ஓரிடத்தில்

வண்டியின் கீழே சிறங்கு சொறிந்து கொண்டிருக்கும் ஒருவர் அருகிற் போய் உட்கார்ந்து, 'தாங்கள் ரைக்வரோ' என்று அவ் வேலைக் காரன் வினவ, ஆமப்பா நான் தான் என்று அவர் மறுமொழி கூற, ஜாநச்ருதியிடம் வந்து, அறிந்து வந்தேன் என்றான். உடனே ஜாந ச்ருதியும் ஆறுநூறு பசுக்களும் காறையும் குதிரைவண்டியும் உபஹார மாகக் கொண்டு ஸமர்ப்பித்துத் தனக்கு தேவதா ஜ்ஞானம் பிறப்பிக்க ப்ரார்த்திக்க, அந்த ரைக்வரும், ஓ சூத்ரனே! உனக்கே இவையெல்லா மிருக்கட்டும் என்ன, ஜாநச்ருதியும், ஏன் இங்ஙனம் கூறினர் என வாராய்ந்து தெளிந்து மறுபடி ஆயிரம் பசுக்கள் முதலானவையோடு தன் பெண்ணையும் அவருக்கு மனைவியாகக் கொடுக்க வழைந்துக் கொண்டு வந்து ஸமர்ப்பித்து அவர் இருக்கும் க்ராமத்தையும் அவ ருக்கு அளிக்க, அவன்குணத்தைக் கண்டு களித்து, 'கொண்டுவா' என்று ஸ்வீகரித்து அப்பொழுதே உபதேசித்தருளினர். அந்த வித்யை யாவது ஸம்வர்கவித்யை.

அக்னி ஸூர்ய சந்த்ர ஜலங்களுக்கும் லயஸ்தானமாயிருப்பது வாயுவென்றும், உடலில் வாக்கு, கண், காது, மனது என்றவை களுக்கு லயஸ்தானமா யிருப்பது ப்ராணன் என்றும் ஆகவே இவை இரண்டும் ஸம்வர்கங்கள் என்று முரைத்தார். இங்குரைக்கப்பட்ட தேவதை யாதென்பதை யுணர்த்த இதன் மேல் ஓர் உபாக்யானமும் ஓதப்பட்டது. காபேயன் அபிப்ரதாரி என்ற விருவர் போஜனத் திற்கு வீற்றிருக்கும் தருணத்திலே ஒரு ப்ரம்மசாரி பிக்ஷை கேட்க யாரும் பிக்ஷை கொடாமலிருக்க, அவன் அங்கே, 'உலகத்தைக் காக்கும் தேவனொருவன் நான்கு மஹாத்மாக்களை விழுங்கி விளங்கு கிறான். பல உருவாக வஸித்துவரும் அத் தேவதையைக் காபேயரே! மனிதர்கள் அறிகிறார்களல்லர். இவ் வன்னம் எவனுக்காகவோ, அவ னுக்கு இதை அளிக்கவில்லை' என்று சொன்னான். இதற்குக் காபே யன், 'தேவதைகளுக்கு ஆத்மாவும் ப்ரஜைகளை ஸ்ருஷ்டிப்பவனும் அழகிய பற்களுள்ளவனும் அதிகமாகப் புசிப்பவனுமான இந்த ஸர் வஜ்ஞனுடைய மஹிமையை மிகப் பெரிதாகச் சொல்வர். இவன் ஒருவராலும் புசிக்கப்படாமலிருந்து போஜனமாகாததையும் புசிக்கிற வன். இப்படி நாங்கள் உபாஸிக்கிறோம். அங்ஙனமன்று உபாஸிப் பது' என்றவாறு மறுமொழி கூறி பிக்ஷை யளிக்க ஆஜ்ஞாபித்தான் என்றது. இப்படிச் சொன்ன ஸம்வர்க்கங்களைத் தெரிந்துகொண்டு ஐந்தும் ஐந்துமான பத்தையும் ஒரு க்ருதமென்றும் அன்னமென்றும்

விராட் என்றும் உபாஸிப்பவன் ஸர்வஜ்ஞனாய் அந்நத்தைப் புசிப்பான் (அதாவது ஸர்வ போக்யமான அன்னமாகப் பல விடங்களிலே யோதப் பெற்ற பரப்ரம்மத்தை யனுபவிப்பான்). இது இதன் பலனும்.

4–9. ஷோடசகலப்ரஹ்ம வித்யை. ஸத்யகாம னென்பவன் ஜபாலை யென்னும் தன் அன்னையிடம், 'நான் வெளியிலே ப்ரம்ம சர்யத்திற்காகப் போகப் போகிறேன். கோத்ரம் தெரிய வேண்டும்' என்றான். 'நான் பெரியோர்களுக்குப் பரிசர்யை செய்து வெகுவாக உழைத்த வண்ணமே யிருந்து யௌவனத்திலே உன்னைப் பெற்றேன். இந்த நிலையிலே கோத்ர மறியாமலே இருந்துவிட்டேனாகையாலே நான் என்ன செய்வது? நான் ஜபாலை; நீ ஸத்யகாமன் இவ்வளவுதான் எனக்குத் தெரிந்தது. நீ ஆசார்யனிடத்திலும் இதையே சொல்' என்றனள் அன்னை. ஸத்யகாமனும் கௌதம-ஹாரித்ருமதரிடம் சென்று இதனை விண்ணப்பிக்க, 'இப்படி யுண்மை யுரைத்துக் கொண்டு வந்ததாலே நீ ப்ராம்மணனே' என்று அவர் புகழ்ந்து அவனை அனுக்ரஹித்துத் தன்னிட மிருந்த பசுத்திரளிலே வலிவற்றிளைத்திருந்த நானூறு பசுக்களைப் பிரித்துச் சேர்த்து இவைகளை வளர்த்து வா என்று ஆஜ்ஞையிட்டார். ஸத்யகாமனும் ஸந்தோஷத்துடன் இவை ஆயிரமாக ஆவதற்கு முன் திரும்புவதில்லை யென்று விண்ணப்பித்து ஓட்டிச் சென்றான். இப்படி அவன் வெகு வர்ஷங்கள் வெளியிலே மேய்த்திருக்க அவைகளும் ஆயிரம் ஆக, அவற்றிலே ஒரு காளையானது அவனைப் பார்த்து, 'ஸத்யகாமனே! நாங்கள் ஆயிரமாய்விட்டோம். ஆசார்யன் இல்லத்திலே எங்களைச் சேர்த்துவிடு. உனக்கிங்கே ப்ரம்மத்தின் பாதமொன்றைச் சொல்லுகிறேன்' என்றது. அவனும் இசைய ப்ரகாசவானென்ற ஒரு பாதத்தை யுபதேசித்து அதற்கு நான்கு அவயவங்களையும் கூறி, இனி அக்னி உனக்கு மற்றொரு பாதம் சொல்லுமென்றது. மறுநாள் மாடுகளை யோட்டிக் கொண்டே போய் வழிநடுவில் மாலையிலே மடக்கிவிட்டு ஸமிதாதானம் செய்திருந்த தருணத்திலே அக்னி அனந்தவான் என்னுமொரு பாதத்தையும் அதன் நான்கு பாகங்களையு முபதேசித்து, ஹம்ஸத்தினிடமிருந்து மூன்றும் பாத மறிவாயாக வென்றது. முன்போலவே மறு நாள் மாலையில் அன்னத்தினிடம் ஜ்யோதிஷ்மான் என்ற பாதத்தை அதன் நாலு அவயவங்களோடு அறிந்தான். அது சொன்னபடியே அதற்கு மறுநாள் மாலையில் மத்கு என்னும்

நீர்ப் பறவையினிடமிருந்து ஆயதநவாந் என்ற பாதத்தை அவயவங்களோடு கற்றறிந்து ஆசார்யனகம் புகுந்தான். பார்த்த மாத்திரத்திலே ஆசார்யனும், ஸத்யகாமா! நீ ப்ரம்மத்தை யறிந்தவனாகவே காண்கிறாய். யார் உபதேசம் செய்தனரோ என வினவினார். சொன்னவர் மனிதரல்லரென்றுள்ளபடி விண்ணப்பித்து, ஆசார்யமூலமாக அறியப்பட்டால் தான் வித்யையால் பெறும் பலனுண்டு. ஆகவே ஸ்வாமியே உபதேசிக்கவேணு' மென்று வேண்டிக்கொண்டான். அந்த வேண்டுதற்கிணங்கி ஆசார்யனும் அதனை அங்ஙனமே முழுமையும் ஒருமுகமாக உபதேசித்தார். அவைகள் உபதேசித்ததும் அவர் உபதேசித்ததும் எல்லா மொன்றே. கொஞ்சமும் குறைபாடெங்குமில்லை.

10–15. மேற் சொன்ன ஸத்யகாமனிடத்தில் ப்ரம்மசர்யம் பெற்றிருந்தவன் உபகோஸலன். பன்னிரண்டு வருஷ காலம் இவன் அவருடைய வைதிகாக்நிகளைப் பாதுகாத்துப் பரிசர்யை செய்து வந்தான். அணுகிய சீடர்களை யெல்லாம் உபதேசத்தை முடித்து அனுப்பிவருமவர் இவனுக்கு மாத்திரம் பூர்த்தி செய்யாமலே இருந்தார். ஆசார்யரின் மனைவியானவள், 'பாவம்! ப்ரம்மசாரி மிகவும் கிலேசப்பட்டு அக்னி சுச்ரூஷை செய்தானே. உபதேசியாவிடில் தங்களை அக்னிகள் என்ன நினைக்கும்படியாமோ. உபதேசிக்கலாமே' என்று புருஷகாரமாகவும் நின்றாள். ஆகிலும் அவர் உபதேசியாமலே வெளியூர் சென்று விட்டார். ப்ரம்மசாரி மனோவ்யாதியினால் நொந்து கிடந்தான். ஆசார்யன் மனைவி அவனை ஆஹாரம் உட்கொள்ளும்படி வேண்டியும் அவன் மறுத்துவிட்டான். 'எத்தனையோ விஷயங்கள் பாதித்துவரக் கூடியவைகள் இருப்பதால் வெகு விதமான வ்யாதிகளாலே வயிறு நிரம்பி யிருக்கிறது. உண்ணகில்லேன்' என்றான். அக்னிகளுக்கு அவனிடம் தயை முதிர்ந்துவிட்டது. அவனுக்கு, 'ப்ராணன் பிரம்மம். கம் க்கம் (க் ங்) ப்ரம்மம்' என உபதேசம் செய்தன. க் ஙம் என்பதற்கு அளவில்லா வானந்தரூபனென்கிற பொருளையும் கேட்டுணர்ந்தான். பிறகு ஐஹிகமாகவோ ஆமுஷ்மிகமாகவோ ஒரு குறையு மில்லாமலிருக்க அக்னி வித்யை யென்பதையு முபதேசித்தன. 'இதற்கு மேலுள்ளவற்றை ஆசார்யன் உபதேசிப்பர்' எனவும் கூறின. வெளியூரிலிருந்து ஆசார்யன் வந்து அவன்முகத்தைக் கண்டதும், 'என்ன உன் முகம் ப்ரம்மஜ்ஞானியினுடைய முகம் போல் ஒரு வெளிச்சிறப்பு கொண்டிருக்கிறதே. யார் உபதேசித்தனர்' என்று கேட்டார். உண்

மையில் அவன் பூர்ண ப்ரம்மஜ்ஞானம் பெறுமலிருந்ததால் கொஞ்சம் பெற்று மிருந்ததால் ப்ரம்மஜ்ஞானம் பெறவில்லை யென்றோ, பெற்றேன் என்றோ சொல்ல முடியாத வண்ணமாயிருந்து, இவ்வக்னிகள் இப்போது காணும் வண்ண மிராமே வேற்றுருவங் கொண்டு உபதேசித்தனர் எனவும் விண்ணப்பித்து, நியமனப்படி அறிந்ததையும் இன்னதென்றறிவித்தான். 'ஏதோ அற்ப பலன்களை உனக்குபதேசம் செய்து நின்றன அவை. நான் உனக்கு நற்கதி காணவைக்கிறேன். நான் சொல்வதை யறிந்தாயாகில் தாமரையிலையில் தண்ணீர் தட்டாதது போல் பாபம் ஆத்மாவில் ஒட்டா தொழியும், ஆத்மாவென்பது கண்ணுள்ளே காணக் கூடியது. இதற்கு அழிவு கிடையாது. பயத்திற் கிடமேயில்லை. இது தான் ப்ரம்மம். கண்ணிலே நெய்யை அல்லது நீரை வார்த்தால் அதில் அது தட்டாமே போய் விடுகிறதன்றோ? ப்ரம்மத்தின் ஸ்தானத்திற்கே இம் மஹிமை யென்றால் ப்ரம்மத்தின் மஹிமையைச் சொல்ல வியலுமோ' என்றெல்லாம் சொல்லி அனேகம் கல்யாண குணங்களையு முபதேசித்து, 'இவ்வுபாஸனம் செய்தவன் முமுக்ஷுவாகையாலே மரணம் நேர்ந்த பிறகு இவனுக்குச் செய்யவேண்டும் சடங்குகள் நடந்தேறு விட்டாலும் இவன் உடனே (அர்ச்சிராதி மார்க மென்கிற தேவயாந மார்கத்தாலே) அக்னி, பகல், சுக்லபக்ஷம், உத்தராயணம், ஸம்வத்ஸரம், சூரியன், சந்திரன், மின்னல் அதைச் சார்ந்த அமாநவன் என வுள்ள வழி நடத்தும் மஹான்களாலே வழி நடத்தப்பட்டு அவ் வமாநவனாலே ப்ரம்மத்தினிடம் சேர்க்கப் படுகிறான். பின்பு ஒருகாலும் இவ்வுலக க்லேசத்திற்குட்படுவதில்லை' யென்றுபதேசித்தார் ஆசார்யன்.

இது உபகோஸலவித்யை. நடுவில் அக்னிகள் உபதேசித்தது அக்னிவித்யை

**16, 17.** யஜ்ஞத்தைப் புகழ்ந்து, அதில் நான்கு ருத்விக்குகளும் மனஸ்ஸு, வாக்கு என்னும் இரு சக்கிரங்களைக் கொண்டு அந்த வண்டியையோட்டி வைப்பதையும், ஒரு சக்கிரம் கெட்டாலும் வண்டி விழுந்துவிடு மாகையாலே எல்லாம் சரியானபடி இருக்க வேண்டும் ஏதேனும் செய்யும் அங்கங்களிலே ஏற்றத்தாழ்வு ஏற்படுமாகில் ப்ராயச்சித்த ஹோமம் செய்ய வேண்டு மென்றும், அதற்கு மூன்று வ்யாஹ்ருதிகள் முக்கிய மென்றும், அவை மூன்று வேதங்களினின்று தோன்றினவை என்றும், இதை யறிந்த ப்ரம்மாவைக்

கொண்டுதான் ருத்விக்குகளையும் யஜமாநனையும் யாகத்தையும் காக்க வேண்டும் என்றும் சொல்லிற்று.

5. 1-2. இனி ப்ராணவித்யை-ஜ்யேஷ்டனும் ச்ரேஷ்டனுமாம் ப்ராணன் என்றுபாஸிக்க வேண்டும்.

கர்ப்பம் தரிக்கப் பட்டது முதலே அதன் வளர்ச்சிக்கு ப்ராணன் காரணமாகிறது. கண், காது முதலான உருவங்கள் உண்டான பிறகுக் கருவிகளான இந்திரியங்கள் இடம் பெறுகின்றன. ஆகவே ப்ராணன் மூத்தவனாய் ஜ்யேஷ்ட னென்னப் படுகிறான். ச்ரேஷ்டனுமவனே. ஏனெனில், இதை உபாக்யானத்தைக்கொண்டு விளக்குவோம். ப்ராணனும் இந்திரியங்களும் யார் உயர்ந்தவரென்று கலஹம் செய்து கொண்டு ஸ்ருஷ்டித்த ப்ராஜாபதியினிடம் போய் வ்யவஹாரத்தைத் தீர்க்க வேண்டிக்கொண்டன. அப்போது அவர் சொன்னதாவது, 'உங்களுக்குள் யார் சரீரத்தை விட்டு வெளிப்பட்டால் சரீரம் நிலைகுலைந்தழியுமோ, அவரே ச்ரேஷ்ட ரென்றதாம். வாக்கு ஒரு வருஷ காலம் வெளியில் இருந்து பார்த்தது. ஊமை போலவே யிருந்து சரீரம் ஜீவித்திருந்தது. இப்படி குருடும், செவிடும், தெளிந்த மனமற்றவனும் ஜீவித்திருக்குமா போலே பிழைத்திருப்பதை மற்ற இந்திரியங்களும் கண்டன. ப்ராணன் வெளிக் கிளம்பப் பார்த்தது. கட்டிலிருக்கும் கொழுத்த குதிரை கட்டுத்தறியில் முளைகளையெல்லாம் பிடுங்கிக் கொண்டு புறப்படுமாபோலே அது புறப்பட, வாக்கு முதலான புலன்கள் சரீரம் போலே வதைக்கப்பட்டு, 'வேண்டாம் வேண்டாம்' என்று தடுத்து எங்களுக்குள்ள பெருமைகள் யாவும் உன்னுடையனவே என ப்ராணனைத் துதித்தன. வாக்கு விசேஷமாகப் பணம் பெறுவிப்பதும், கண் எவ்வுலகிலும் ப்ரதானமாய் மேடு பள்ளம் தெரிவித்து நிலைக்கச் செய்வதும், காது ஐஹிகமும் ஆமுஷ்மிகமுமான எல்லாப் பலன்களையும் பெறச் செய்வதும், மனது ஆத்மாவிற்கு எல்லாக் குணங்களையு முண்டாக்குவது மெல்லாம் ப்ராணனுடையவையே யென்று தம் பெறுமைகளை யெல்லாம் ப்ராணனுக்கே அர்ப்பணம் செய்தன. பிறகு உலகம் புசிக்கு மன்னமெல்லாம் ப்ராணனுக்கே யென்றும் புசிப்பதற்கு முன்னும் பின்னும் அருந்தும் ஆசமந தீர்த்தம் அதற்கு உடை யென்றும் சொல்லி ஊணும் உடையும் அவ்வை யளித்தன. ஆக ப்ராணனை இங்ஙனம் உபாஸிப்பதென உணர்த்தினபடி.

பிறகு பெருமையைப் பெற விரும்புவோன் ப்ராண விஷயமாகச் சில ஹோமம் முதலானவற்றைச் செய்யும் வகையான மந்த்தகர்ம வென்றதொரு க்ரியையை யுபதேசித்து இங்ஙனம் ஹோமம் செய்த வனோ இதைப் போல ஏதேனும் ஒரு காம்ய கர்மத்தைச் செய் பவனோ ஸ்வப்நத்திலே சுந்தரியான ஸ்திரீயைக் கண்டானாகில் தனக் குப் பலன் கை கூடிற்றெனத் தெளியலா மென்றது.

3–10. பஞ்சாக்னி வித்யை. அருண மஹிர்ஷியின் பேரனான ச்வேதகேது என்பவன் பஞ்சால தேசத்திலே ஸதஸ்ஸுக்குச் சென்றான். அங்கே ப்ரவாஹண னென்ற ராஜர்ஷியிடம் நெருங்கி னன். ராஜர்ஷியும், பிள்ளாய்! தமப்பனர் உமக்கு உபதேசங்களைச் செய்தருளினரா?' என்று கேட்டான். இவனும் 'ஆம்' என, ப்ரவாஹணன் மேல்வருமாறு வினவினன்.—

க. 'ப்ரஜைகள் மரண மடைந்த பிறகு போகுமிட மெது தெரியுமா?'

'பூஜ்யரே! எனக்குத் தெரியாது.'

உ. திரும்பிவரும் போதுள்ள வழி தெரியுமா?

'தெரியாது.'

ங. 'தேவயாந மார்க்கம், பித்ருயாண மார்க்கம் என்றவையின் வேறுபாடு தெரியுமா?'

'தெரியாது.'

ச. மேலுலகம் போய்ச் சேர்ந்த ப்ராணிகள் யார். தெரியுமா?

'தெரியாது.'

ரு. ஐந்தாவது ஆஹுதியில் மனிதனைப் பிறப்பது தெரியுமா?

'ஒன்றும் தெரியாது.'

'ஆகில் நீர் உபதேசம் பெற்றதென்? இவைகளை யறியவில்லை யாகில் உபதேசம் பெற்றதாக எங்ஙனம் கூறுவது?'

இங்ஙனம் கேட்டதும் ச்வேதகேது மிக்க ஆயாஸமுற்று தமப் பனர் இருக்குமிடம் ஓடிவந்து தனக்கு நேர்ந்த மாநபங்கத்தைச் சொல்லி வருத்தப்பட, தமப்பனரான கௌதம உத்தாலகரும் 'குமா ரனே! எனக்குத் தெரிந்திருந்தால் சொல்லாமலிருப்பேனோ' என்று

சொல்லி, தாமே அதை அரசனிட மறிந்துவர வந்து சேர்ந்தார். ப்ர வாஹணனும் வான் அளித்திருந்தும் வேறு ஏதாவது கொடுத்தனுப்பி விட முயன்று அது வீணுக, அவ்வித்யையின் அருமையைச் சொல்லி, ராஜகுலத்தில் மாத்திரம் இருந்த அவ்வித்யையை அவருக்கு உபதே சித்தான்.

ஐந்து அக்னிகளாவன :—ஸ்வர்க்கம், மேகம், ப்ருதிவி, புரு ஷன், ஸ்திரீ என்றவை. ச்ரத்தையோடு புண்ய கர்மம் செய்தவன் மரண மடைந்ததும் உடலினின்று கிளம்பிய பூதஸூக்ஷ்மம் முதலில் ஸ்வர்க்கம் என்கிற அக்னியில் ஹோமம் செய்யப்படுகிறது. அங்கு வெகு போக்யமான சரீரம் எடுத்து இருந்த பிறகு அவன் பூதஸூக்ஷ் மம் மேகத்திலே சேர்க்கப்படுகிறது. பிறகு பூமியிலே பல தானியம் முதலான ஆஹாரத்திலுட்புகுந்து நிற்கிறது. பிறகு புருஷனின் உட லிற் சேர்ந்து ஸ்திரீ யென்னப்படும் ஐந்தாவது அக்னியிலே ஹோமம் செய்யப் பெற்று புருஷ வடிவம் கொள்கிறது. அங்கே பத்து அல் லது ஏறக்குறைய சில மாதங்கள் தங்கி பிறந்து ஆயுள் வரைக்கு மிருந்து மறுபடி மரித்து முன் போல் போய் வருகிறது.

இங்ஙனம் ஸம்ஸரிக்கும் ஆத்மாவின் உள் நிலையை (ஆத்மாவை உடல் புலன்களெல்லாவற்றினும் வேருன தென்றவாருக) அறிந்தவ ரும், மற்றும் வெகு ச்ரத்தையுடன் வநாந்தரங்களிலே ப்ரம்மத்தை யுபாஸிப்பவரும் அர்ச்சிராதி மார்க்கத்தாலே ப்ரம்மத்தைப் பெறுகிருர் கள். இந்த மார்க்கம் தேவயாந மார்க்கம்.

இதுவின்றி ஊரில் ஒன்று சேர்ந்து பலவித யஜ்ஞங்களையும், குளம் வெட்டுவது, ஆலயம் கட்டுவது முதலானவற்றையும், தாந தர்மங்களையும் பலன்களைக் கோலிச் செய்பவர் பித்ருயாண மார்க்கம் வாயிலாக ஸ்வர்க்கம் சென்று அங்குள்ளாருக்குப் போக்யமாகச் சந் திரனைப் போன்ற சரீரம் பெறுவர். அம் மார்க்கமாவது—புகை, இரவு, க்ருஷ்ணபக்ஷம், தக்ஷிணுயனம், பித்ருலோகம், ஆகாசம், சந்திரன் என்ற முறையிலமைந்தது.

திரும்பின பிறகு வரும் மார்க்கமாவது :—ஆகாசம், வாயு, புகை, மேகம், மழை, ஓஷதிகள் எனவாம். ஓஷதிகளிலிருந்து சரி யானபடி புருஷனிடம் போய்ச் சேருவது வெகுவாகத் தாமதிக்கும். பிறகு அவனவனது முன் கர்மத்திற்குத் தகுந்தபடி உச்ச நீச ஜன்மங்கள் ஏற்படுகின்றன.

கீழ்ச் சொன்ன மார்க்கங்களிலே ஸம்பந்தம் பெறுமே அடிக்கடி பிறப்பதும் மரிப்பதுமாய் ஈ, கொசு, புழு, பூச்சிகளைப் போலாம் ப்ராணிகளுமுண்டு. இவற்றிற்கு மேலுலகத்திற்குச் செல்வதென்பது இல்லை.

பஞ்சமஹா பாதகிகளாவார், பொன் வெள்ளி திருடுகிறவனும், கள் குடிப்பவனும், குருதாரகமனம் செய்பவனும், ப்ரம்மஹத்யை செய்பவனும், இந்நால்வரில் ஒருவரோடு ஸஹவாஸம் செய்பவனும். பஞ்சாக்நிவித்யையில் இழிந்தவனுக்கு மஹா பாதகிகளோடு சேர்ந்த தாலேற்படும் பாவம் கிடையாது. (இது இவ் வித்யைக்குள்ள தொரு சிறப்பு.)

11–24. வைச்வாநரவித்யை. ப்ராசீநசாலர், ஸத்ய யஜ்ஞர், இந்திரத்யும்நர், ஜநர், புடிலர் (புடிலர்) என்ற, அத்யயநமும் அநுஷ்டான மும் நிரம்பின மஹர்ஷிகள், 'நம் ஆத்மா யாது 'ப்ரம்மமென்' எனச் சேர்ந்து ஆராயலாயினர். கடைசியாக, 'அருணரின் புதல்வரான உத்தாலகர் இது விஷயத்திலே நல்லறிவுள்ளவர். அவரிடம் சென்று தெளிவோம்' என்று அவரை யணுகினர். அவரும், 'இவர்களின் கேள்விகளுக்கு யான் மறுமொழி கூற வியலேன். ஆக வேறொரு வரையே குறிக்க வேண்டும்' என்று தீர்மானித்து, 'இது விஷயத் திலே நன்கு தெரிந்தவர் கேகய தேசத்தரசன் அச்வபதி. அவனிடம் செல்வோம்' என்றார். அறுவரும் அங்கே சென்றனர். அவ் வரச னும் இவர்களைத் தனித் தனியே செவ்வனே ஸத்கரித்து, காலையில் எழுந்தவுடன் இவர்களிடம் சென்று, 'எனது தேசத்திலே திருடன், க்ருபணன், குடியன், ஆஹிதாக்நியல்லாதவன், ஜ்ஞாநமிராதவன், பர தாரத்தினிடம் செல்பவன், பரபுருஷ சம்பந்தமுள்ள ஸ்திரீ என் னப்படுபவர் கிடையார். ஆக இங்குள்ள தனம் சுத்தமானது. இப் போது யாகம் செய்யப் போகிறேன். அதிலே ருத்விக்குகளுக்கு அளிப்பது போல் தங்களுக்கும் த்ரவ்யம் அளிக்கிறேன். இருக்க வேண்டுமென்றான். இவர்களும், 'எவர்களுக்கு எது வேண்டுமோ அதுதான் அவர்களுக்கு தனம். நாங்கள், வைச்வாநராத்மாவைக் கற்க வந்தவர்கள். எங்களுக்கு அதை யளிக்க வேண்டு'மென்றனர். ஆகில் நாளைத் தினம் காலையில் அங்ஙனம் ஆகக்கடவதென்றான் ராஜர்ஷி. அவர்கள் ப்ராம்மணரான படியாலே அவர்களிடமிருந்து சுச்ரூஷையை யபேக்ஷியாமலே உபதேசிக்கத் தொடங்கினான். அவர்களுக்கு

விவாதம் இருப்பதைத் தெரிந்து அவரவர் உபாஸிக்கும் வண்ண மறிந்து தத்துவத்தைப் பிறகு உபதேசிப்பது நலமென நினைத்து தனித் தனியே ஒவ்வொருவரையும், அவரவர் வைச்வாநராத்மோ பாஸனம் எவ்வண்ணம் செய்கின்றனர் என்பதைத் தெரிவிக்கச் சொன்னான்.

கீழ்க் குறித்த ஆறு பேரும் முறையே, த்யுலோகம், ஆதித்யன், வாயு, ஆகாசம், ஜலம், ப்ருதிவி என்பவற்றில் ஒவ்வொன்றை வைச் வாநராத்மாவாக உபாஸிப்பதாகச் சொன்னார்கள். அரசனும், 'இவை யெல்லாம் வைச்வாநராத்மாவின் அவயவங்கள். இவை அடைவாக, தலை, கண், ப்ராணன், உடல், நீர்ப்பை, பாதங்கள் என்ற அவய வங்களாம். உண்மையில் இவை வைச்வாநராம்சங்களாக இருப் பதாலே உபாஸிப்பவருக்குப் பல்விதமான இம்மைப் பலன்கள் காண்கின்றன. நீடித்து இதனையே உண்மையாகப் பற்றினால் உபா ஸிப்பவனின் தலை முதலிய அங்கங்கள் அழியும்படியாம். இவற்றை யெல்லாம் கீழ்ச்சொன்ன அங்கங்களாக அததன் பெயருடன் அறிந்து எல்லாம் ஒன்று சேர்த்து விச்வரூப வைச்வாநரோபாஸனம் செய்யவேண்டும். பலன் அந்த பரப்ரம்மமாகிற பரமான்னமே யாம். இங்ஙனமுள்ள ப்ரம்மத்தினுடைய அவயவங்களைத் தன் உடலின் அவயவங்களிலேறிட்டு அந்த ப்ரம்மத்தை இதிலே வைத்துத் தன் உடலிலுள்ள பாகங்களை அக்நிஹோத்திரத்தின் கருவிகளாகக் கருதி வயிற்றிலிருக்கும் வைச்வாநராக்நியிலே (ப்ராணாக்நி ஹோத்ரத்தை) தனக்கு முதன் முதல்கிடைக்கு மன்னத்தைக்கொண்டு ஐந்து ப்ராணா ஹுதிகளை அவற்றிற்குள்ள முறைப்படி செய்தால் பஞ்ச ப்ராணன் களும், அவற்றின் வாயிலாக இந்திரியங்களும், அவற்றை நியமிக்கும் தேவர்களும், அவர்களைச் சார்ந்த உலகும் த்ருப்தி பெறும். இங் ஙனம் உபாஸிப்பவனுக்குப் பெருந் தீயில் அகப்பட்ட பஞ்சுபோல் பாபங்களெல்லாம் எரிந்துபோம். பசியுடன் தவிக்கும் பிள்ளைகள் தாயை அண்டியிருக்கிற வகையிலே இவ்வக்நிஹோத்ரத்தை யன்றோ உலகம் ஆச்ரயித்திருக்கிறது' என்றுபதேசித்தான்.

6. ஸத்வித்யை. அருண மஹர்ஷியின் பேரன் ச்வேதகேது என்பவன் இருந்தான். அவன் தந்தை அவனைக் கூப்பிட்டு, 'ஓ ச்வேதகேதுவே! ப்ரம்மசர்யம் பெற்றுக் கொள். நம் குலத்திலே அத்யயனம் செய்யாமே இங்ஙனம் வ்ராத்ய ப்ராம்மணனா யிருப்பு

தில்லையே யென்றார். பன்னிரண்டு வயதான ச்வேதகேதுவுக்கு உணர்ச்சி ஏற்பட்டது. வெளியே போய் குருகுல வாஸம் செய்து எல்லா வேதங்களையும் ஸாங்கோபாங்கமாகச் செவ்வனே கற்று, இனி கற்க வேண்டிய தொன்றில்லை யென்ற இறுமாப்புடன் இருபத்திரண்டாம் வயதானதுமே திரும்பித் தன்னில்லம் வந்து புகுந்தான். அவனைப் பார்த்துத் தந்தையானவர், 'என்ன ச்வேதகேதுவே! இனி அறியவேண்டிய தொன்றில்லையென நினைத்தவன் போலே காண்கிறாய், எதைக் கேட்டுச் சிந்தனை செய்து த்யானித்தால் உலகில் எல்லாம் கேட்டுச் சிந்தித்து த்யானிக்கப் பெற்றதாமோ, ஸர்வத்தையும் நியமிக்கு மதனை உபதேசிக்கும்படி ஆசார்யனிடம் கேட்டாயோ?' என்று வினவினார். குமாரன் ஆலோசித்தான், இதென்ன இப்படியும் ஒரு வஸ்து இருக்கலாகுமோ? அது ஒன்றை யறிந்தால் உலகெல்லாம் அறிந்ததா மென்கிறாரே. இங்ஙன மொன்றுண்டாகிலன்றோ, நாம் இதனைக் கேட்டுத் தெரிந்து கொள்ளாததொரு குற்றமாம் என்றவாறு. ஆகவே, 'அங்ஙன மாவதொன்றுண்டோ' எனறான். தந்தையும் அதற்கு என்னத் தடை? உலகிற் பார். ஒரு மண்கட்டியைப் பார்த்திருந்தால் அதிலிருந்துண்டாம் குடம், மடக்கு முதலானவை யெல்லாம் பார்த்தவை யாய்விடுகின்றன. ஒரு பொன்னுருவைக் கண்டால் அதனால் செய்தவை யெல்லாம் கண்டவையாகின்றன. ஒரு இரும்பைக் கண்டு விட்டால் அதனாலாய கருவிகளனைத்தும் காணப்பெற்றன வாகின்றன. ஏன்? ஒன்றே பல உருவங்களைப் பெற்று அவ்வுருவங்களுக்குத் தக்க பெயரும் பெறுகின்றதால். ஆகக் காரணம் வேறு, அதிலிருந்து வரும் காரியங்கள் வேறென்ற கொள்கை இங்ஙனம் உண்மை யாகாது. ஆக உலகெல்லாம் ஒரு வஸ்துவினிடமிருந்து பிறந்ததாகில் அதை யறிந்தால் இதெல்லாம் அறிந்ததாகத் தட்டில்லையே யென்றார். குமாரன் விழித்துக் கொண்டான். நம்மிடத்திலே அளவில்லாக் கருணை பொருந்திய நம் ஆசார்யன் இதனை யேன் நமக்கு உபதேசிக்கவே யில்லை? நாம் கேட்காவிட்டாலும் கிருபையினால் கற்பிப்பவரல்லரோ அவர். இது ஒருக்கால் அவரும் அறியாததொன்றா யிருக்கலாம் என ஊஹித்துத் தந்தையினிடம் விண்ணப்பித்து இவரிடமே இதைக் கற்க விரும்பி ப்ரார்த்தித்தனன். தந்தையுமிசைந்து இவ்வாறு உபதேசித்தனர்.

பலவகை வஸ்துக்கள் நிறைந்துள்ள இவ்வுலகெல்லாம் ஸ்ருஷ்டிக்கு முன்பு ஒரே வஸ்துவாய் ஸ்ருஷ்டி கர்த்தாவாகக் கூட இரண்

டாவது வஸ்து இன்றி இருந்தது. இந்த ப்ரபஞ்சமே காரணகார மாய் இருந்ததென்றுமே, இது ஒரு விதமாகவு மில்லாமலே இருந்த தென்றும், த்ரவ்யம் முன் இல்லாமலே பின் உண்டாகிறதென்றும் சிலர் சொல்லுவர். இந்தத் தர்க்க வாதம் வெறுக்கத் தக்கதாம். உலகில் ஒன்று ஒன்றாக மாறுவதைப் பார்த்திருக்கிறோமே யல்லது ஒரு விதமாகவு மிராமற் புதியதொரு த்ரவ்யத்தைக் கண்டதில்லை. மண்கட்டி முன்னே குடமாக விராமல் மண்ணாக விருந்து, பிறகு குடமாயிற்றென்றால் இசைய வியலும். மண் வேறு; குடம் வேறு. மண்ணாகக் கூட முன் இராமல் குடமென்ப துண்டாகிறதென்றால் அநுபவத்திற்கும் யுக்திக்கு மிது பொருந்தாது. வீண் கற்பனை யதிக மாகும். ஆக ஸ்ருஷ்டிக்கு முன் இருந்ததொன்றே பலவாக வாயிற் றென்று கொள்க. ஆகக் கார்யமும் உண்டாவதற்கு முன்னும் ஒருவித மாக இருந்ததென்றும், அதனால் ஸத்து எனப்படுமென்றும் கொள்க. இதனை விவரிக்கிறோம். அவ்வஸ்து, நான் வெகுவாக ஆகக் கடவேன் என்று ஸங்கற்பம் செய்துகொண்டு தேஜஸ்ஸை ஸ்ருஷ்டித்தது. தேஜஸ்ஸா யிருந்து ஜலத்தை ஸ்ருஷ்டித்தது. ஜலமாயிருந்து ப்ருதி வியை ஸ்ருஷ்டித்தது. இந்தப் பூதங்களும் உலகில் ப்ராணிகள் என் னும் பூதங்களாயின. அந்த ப்ராணிகள் அண்டஜம், ஜீவஜம், உத்பிஜ் ஜம் என்று மூன்று வகையாம். அவையாவன—முட்டையினின்றுண் டாவது, மாடு மனிதனைப்போல் ப்ராணியினிடமிருந்தே பிறப்பது, பூமியைப் பிளந்து மரம், செடி இவற்றைப் போல் உண்டாவதென் றவை. இம்மூன்றும் வகுப்பிலே ஸ்வேதஜமும் (வியர்வையி லிருந்துண் டாம் ஜந்துவும்) சேரும். ஆக நான்காகக் கூறுமே மூன்றென்றது. இவை யுண்டாம் வகையாவது—'முன் சொல்லப்பட்ட மூன்று மஹா பூதங்களிலும் ஜீவாத்மாவோடுஸத்து ப்ரவேசித்து நாமரூபங்களைச் செய்யக்கடவேன் (உருவுண்டாக்கிப் பெயரும் தனித் தனியே வைக் கக் கடவேன் என்று ஸங்கற்பித்து, அதற்காக மூன்று மஹா பூதங்களையும் த்ருவிருத்காரணம் செய்து ஸங்கற்பித்த படியே யாயிற்று. த்ருவிருத் காரணமாவது ஒவ்வொன்றையும் மூன்றும் கலந் ததாக்குகை. ஆகவே இப்போது நமக்குக் காணப்படும் நீர், நிலம் முதலியன சுத்தமான நீர் நிலம் முதலியன வாகா. இப்போதுள்ள நீரில் சுத்த நீர்ப்பாகம் பாதி, மற்ற பாதி மற்ற பூதங்கள். இப்படி நிலத் திலும் தேஜஸ்ஸிலும் காண்க. [இதைப் பஞ்ச பூதங்கள் என்று எடுத்துச் சொல்லும்போது பஞ்சீகரணமென்றும் சொல்வதுண்டு.]

இப்படி அந்தந்த பூதம் பாதி மற்றவை பாதியாகச் சேர்த்து வுரு வாக்கி அவற்றிலிருந்து (சரீரம்) உடலை ஸ்ருஷ்டித்து ஜீவாத்மாவுடன் உட்புகுந்து ஒவ்வொரு வஸ்துவாகவும் பரப்ரம்மம் நிற்கிறது. இங்ஙனம் ஒன்று வெகு வாயிற்றென்க.

த்ருவிருத் காணம் செய்யப்பெற்ற வஸ்துக்களே நமக்கிங்கே காணப்படுமவையெல்லாம் என்பதைப் பல உதாரணங்களிலிருந்து காணலாம். தேஜஸ்ஸுக்கு இயற்கை நிறம் சிவப்பு, ஜலத்திற்கு வெண்மை, ப்ருதிவிக்குக் கருமை. இங்ஙனமிருக்க நெருப்பு முதலான வற்றில் மூன்று நிறங்களையும் பார்க்கிறோம். இது த்ருவ்ருத்காணப் படி எல்லாம் சேர்ந்ததால் ஏற்பட்டதென்க. பிறவும் காண்க.

இங்ஙனம் மூன்று மஹா பூதங்களினின்று பிறந்த உடல் வளர்த்தலுக்கு உபயோகிக்கும் அன்னம் மூன்று பரிணமங்களைப் பெறுகிறது. அஸாரபாகம் மலமாய் விடுகிறது. ஸாராம்சம் மாம்ஸ மாம். மிகவும் ஸாரமான நுண்ணிய பாகம் மனதைப் போஷிக் கும். அருந்தும் ஜலமும் நீர், இரத்தம், ப்ராணனைப் போஷிக்குமது என மூன்றாக மாறுகிறது. தேஜோமயமான ஆஹாரம் எலும்பு, அதற்கு வேண்டும் ஸ்நேஹம், வாக்கை வளர்க்கும் பாகமென மாறு கிறது. தயிரைக் கடைந்தால் வெண்ணெய் வெளிக் கிளம்புமா போலே உட்கொள்ளும் ஆகாரத்திலிருந்து மனது, ப்ராணன், வாக்கு இவை களுக்கு வேண்டும் ஸூக்ஷ்மாம்சம் வயிற்றிலுள்ள அக்நியில் பக்வம் செய்யப் பெறப்படும்.

அப்பா! நீ பதினைந்து நாள் சாப்பிடாமலிரு. நீரை நன்கு அருந்தி வா. ப்ராணனுக்கு அழிவு வாராது என்றார். அங்ஙனமே ச்வேதகேது நடந்து கொண்டான். பிறகுத் தந்தையினிடம் வந்து, என்ன சொல்வது என்றான். நீ ஓதின வேதங்களைச் சொல் என்றார். ஒன்றுமே மனதிற் தோன்றவில்லை யென்றான். எரிந்த தணலில் ஒரு சிறுதுளி மாத்திரம் நின்றிருந்தால் அது ஒன்றும் எரிக்க மாட்டாது. அதே உணர்ந்த புல்லும் சிறு சுள்ளிகளும் சேர்த்து ஊதி ஜ்வலிப்பிக் கப்பட்டால் எதையும் எரிக்கக்கூடும். அங்ஙனமே உண்ணாம லிருந்த தால் உனது பதினாறு அம்சங்களில் இப்போது பதினைந்து அம்சங் கள் போயின. இப்போது உண்டு வந்தாயானால் எல்லா அம்சங்களும் சேரும். உடனே நீ எதையும் சொல்லக்கூடு மென்றார். அவ் வண்ணமே உண்டு சொல்லத் திறம் பெற்றான். இப்படி மனதிற்கு

அன்னத்தின் நுண்ணிய அம்சங்களால் புஷ்டி ஏற்படுகிற தென்றது முதலானவற்றை விளக்கினார். இவ்வளவால் உலகுக்கெல்லாம் காரண மாமொரு வஸ்து உள்ளே புகுந்து நியமிக்கும் சக்தியோடு இப்போது உரைக்கப்பட்டது. அவனும் தெளிந்தான்.

மறுபடியும் பிள்ளைக்கு உபதேசிக்கத் தொடங்கினார். நித்ரையில் ஆத்மாவின் நிலையைச் சொல்லுகிறேன் என வாரம்பித்து, ப்ருதிவி ஜலத்திலும், ஜலம் தேஜஸ்ஸிலும், தேஜஸ்ஸு ஸத்து என்னப் படும் பரதேவதையிலும் லயிப்பதை நித்ரை, மரணம் இரண்டையு மெடுத்து ஒரு விதமாக நிரூபித்து மேலே சொல்லுகிறார். தேனீக்கள் பலவகை மரங்களிலிருந்து ரஸமானதைக் கொஞ்சம் கொஞ்சமாக எடுத்து ஒன்று சேர்க்கிறன. அங்ஙனம் சேர்ந்த ரஸம், 'நான் இந்த மரத்தினின்று வந்தேன். நான் இந்த மரத்தியதாவேன்' எனத் தனித் தனியே தெரிந்து கொள்ள முடியுமா? அவ்வண்ணமே ஸத்து எனப் படும் பரமாத்மாவினிடம் ஒன்றின ஆத்மாக்கள் தங்களைத் தாங்கள் தெரிந்து கொள்ள மாட்டா. மாரி காலத்தில் கிழக்கும் மேற்குமாகப் பல ஆறுகள் ஓடிக் கடலில் வீழ்கின்றன. இவை கடலினின்றே மேகங்களாலுட் கொள்ளப்படுப் போய் மறுபடி வந்தவை. ஆகிலும் அவற்றிற்கு அது தெரியாது. அங்ஙனமாகுக. பெரிய மரத்தை ஓரி டத்திலே கத்தியால் வெட்டினால் பால் பெருகுகிறது. இப்படி ஜீவித் திருக்கும் மரத்திலே ஒரு கிளையை ஜீவன் விட்டால் அது உலர்ந்து விடுகிறது, பிறகு மற்றொன்றை விடுகிறது, அதுவும் காய்ந்து போகிறது. இப்படியே மொத்தமும்விட மொத்தமும் உலர்ந்து போய் விடுகிறது. இதனால்—தேஹத்தைக் காட்டிலும் ஜீவன் வேறு. அவ னால் விடப்பட்டால் இது மரித்து விடும், ஜீவன் மரிப்பதில்லை யென் றதாம். அருகிலிருக்குமந்த ஆலம் பழத்தைக் கொண்டுவா. விண்டு பார். எத்தனையோ விதைகளிருக்கிறன. அவற்றி லொன்றை விண்டு பார். ஒன்றும் தெரியவில்லை. வெகு நுட்பமா யிருக்கிறது. ஆயினும் இந்த நுட்பத்திலிருந்தே இவ்வளவு பெரிய ஆல மரம் கிளம்பி யிருக் கிறது. இவ்வளவையும் உண்டுபண்ணும் சக்திகள் அவ்விதையி னுள்ளே பொதிந்து கிடக்கின்றன. இப்படியே யாம் நாம் சொன்ன ஸத்து என்ற பரதேவதையு மென்று கொள்வாயாக. உப்புக் கட்டி யொன்றை ஒரு பாத்திரத்தில் நீரில், படுக்கும் போது, போட்டுவிடு. காலையில் எழுந்தவுடன் எடுத்து வந்து அது நீரிலே இருக்கிறதா பார். கையால் தடவிப் பார்த்தாலும் இல்லை. ஆகில் அந்தத் தீர்த்த (ஜல)த்

திலே கொஞ்சம் உட்கொள். என்ன வறிகிருய். உப்பு கரைந்துவிட்டது. இருந்தும் தெரியவில்லை. ஆகக் காரண வஸ்துவும் இங்ஙனம் கரந்தெங்கும் பரந்துள்ளது, தெரியாதெனத் தேறும். ஒரு தேசத்தினின்று ஒருவனைக் கண்களைக் கட்டி வெகு தூரம் கொண்டுபோய் ஜநங்களில்லாத விடத்திலே விட்டுவிடுவோம். அவன் கீழ் மேல் திக்குகள் தெரியாமே பெருங் கூச்சலிடுவான். ஒருவன் இவனது கட்டை அவிழ்த்து இது உனது தேசம்போம் வழியென்று காண்பித்தால் க்ராமத்தின்மேல் க்ராமமாக நடந்தறிந்து தன் இடம் வந்து சேருவான். அதுபோல் ஆசார்யன் மூலமாகவே தன் தன்மை யறிய முடியும். அறிந்தவன், 'இந்த ஸம்ஸாரபந்தம் விட்டால் போதும்; உடனே நான் என்னிடம் சேர்வன்' என்று கதறிக் கொண்டிருப்பான். ஒருவன் மரணமடையும் தருவாயிலிருந்தால் சேர்ந்தவர்கள் அண்டையில் வந்துட்கார்ந்து, 'நான் யார் தெரியுமா, நான் யார் தெரியுமா' என்று கேட்கிருர்கள். சில ஸமயம் அவன் அறிவதில்லை. ஏன் ? அவனது வாக்கு மனதிலும், மனது ப்ராணனிலும், அது தேஜஸ்ஸு என்னப்படும் சரீர பூதஸூக்ஷ்மத்திலும், அது காரணவஸ்துவான பரதேவதையிலும் லயித்துவிட்டதால். திருடினென்ருெருவனைக் கையும் பிடியுமாகப் பிடித்துவந்து, 'இவன் திருடினன். தீயிற் காய்ப்புண்ட கோடரியை அவன் கையில் வைத்துப் பரீக்ஷியுங்கோள்' என்பர். அவன் உண்மையில் திருடியிருந்தால் அதனுல் அவன் உடல் எரிக்கப்படும். இல்லையேல் அவனுக்கு ஒரு தீங்குமில்லை. வீடு பெறுகிருன். இவ் வுதாரணங்கள் பல கூறினேம். எல்லா முணர்ந்து, உலகெல்லாம் இந்தக் காரண வஸ்துவே என்றும், அது அழிவற்றது தோஷமற்றதென்றும், அது இதற்கெல்லாம் ஆத்மாவென்றும், உனக்குள்ளும் அந்த ஆத்மவஸ்து இருக்கிறதென்றும் தெளிந்து கொள் என உபதேசித்தார். ச்வேதகேதுவும் (தமப்பனுர் உலகிலுள்ள உதாரணங்களைக் காட்டி இவ்வளவு அழகாக எடுத்துக் கூற) எளிதில் செவ்வனே தத்துவ ஜ்ஞானம் பெற்ருன். உத்தாலகர் உபதேசம் உலகில் லௌகிகர் மனதிற் படியும்படி அழகாய் அமைந்துள்ளது.

7. பூமவித்யை. உபதேசித்தருளவேணும் என்றிவ்வளவே ஸநத்குமாரரை நாரதமஹர்ஷி சோகம் தாங்காமே தெண்டனிட்டு ப்ரார்த்தித்தார். இந்த நாரத மஹர்ஷியோ எல்லாம் தெரிந்தவர். ஆகவே ஸநத்குமாரர், 'உமக்குத் தெரிந்தவை யாவை, அவற்றைச்

சொல்லும்; பிறகு வேண்டியதைத் தெரிந்து கொள்ளலாம்' என்றார். அவர் தமக்குள்ள வித்யைகளை யெல்லாம் அடுக்கடுக்காகக் கூறி, 'எல்லா சப்தங்களையும் கற்றிருக்கிறேன். ஆத்மா இன்னதென்று தெரியாது.அதைத் தெரிந்தால்தான் சோகம் தீருமென்று தங்களைப் போன்றவர் சொல்லக் கேட்டிருக்கிறேன். ஆக ஆத்மோபதேசம் செய்ய வேண்டு' மென்று தம் கருத்திலுள்ளதை விளக்கினர். அது கேட்டு ஸநத்குமாரரும், நீர் ஓதியுள்ள சப்தங்களை ப்ரம்மமாக வைத்து உபாஸனம் செய்தால் அந்த சப்தங்கள் விளங்குமிட மெல்லாம் யதேஷ்டமாக ஸஞ்சரித்து ஆனந்திக்கலாமென்றார். இதற்கு மேல் ஏதேனு முண்டா என்று மேன் மேல் நாரதர் கேட்க மேன்மேல் ஒவ்வொன்றைக் கூறி ப்ரம்மமாக உபாஸனம் செய்யலாமென்றார். இப்படியவர் நாமம் (சப்தராசி), வாக்கு, மனது, ஸங்கல்ப்பம், சித்தம், த்யானம், விஜ்ஞானம், பலம் அன்னம், தண்ணீர், தேஜஸ்ஸு, ஆகாயம், நினைவு, ஆசை எனப் பதினொன்கை அடைவாகச் சொன்ன பிறகும் அதற்கு மேலானதெதென்று அவர் கேட்க, ப்ராணனை மேலானதாக உபதேசித்தார்.

இங்கே ப்ராணன் என்னப்படுவது ஜீவாத்மா வென்று அவர் தெரிந்து கொள்ளுமாறு அதை மேலே விவரித்தார். அதாவது—உலகில் கொடுக்கிறவன், வாங்குகிறவன், தந்தை, தாய், உடன் பிறந்தான், உடன்பிறந்தாள், ஆசார்யன் என்றாற் போலுள்ளவரெல்லோரும் ப்ராண னென்னப்படுகிறவர். உடலில் இதுள்ளவரையில் யாராவது திக்காரமாகப் பேசினால்கூட இவன் பித்ருஹத்தி பண்ணுகிறவன், மாத்ருஹத்தி பண்ணுகிறவன் என்றவாறு உலகம் நிந்திக்கும். சீவன் உடலை விட்டு நீங்கினால் பிறகு அந்த வுடலை எவ்வளவு புறட்டி நெருப்பில் எரித்தால் கூட ஹத்தியைப் பண்ணுகிறதாகச் சொல்லுகிறதில்லை யென்றார். பிறகு, இந்த ப்ராணனை உபாஸிப்பவன் தன்னை அதிவாதியாக, அதாவது உயர்ந்த புருஷார்த்தமாய் போக்யமான வஸ்துவை உபாஸிப்பவனாகச் சொல்லிக் கொள்வான். அங்ஙனம் சொல்லிக் கொள்ளலாம். ஆனாலும் இந்த ப்ராணனைக் கொண்டு அதிவாதியாவதை விட ஸத்யம் எனப்படும் ப்ரம்மத்தை (பரமாத்மாவைக்) கொண்டு அதிவாதியாவது தான் தகுந்தது. அப்படி யதிவாதியாவதற்கு அதன் உபாஸனம், அதற்காக மனனம், அதில் ச்ரத்தை, அதிலேயே நிலையான பற்றுதல், அதற்குத் தகுந்த செய்கை, இது உண்டாம்

(4)

படி அந்த ஸத்யமான வஸ்துவை ஸுகஸ்வரூபமாக அறிவது; அதினும் வேறொன்று கேட்கவும் கருதவும் வேண்டாதபடி பெரும் ஸுகமாய் பூமா என்னப் படுவதென வறிவது அவசியம். இதற்கு மேற்பட்ட தொன்று கிடையாது. இதுவே கீழும் மேலும் எல்லாத் திக்குகளிலு மிருப்பது. 'இதே நான்' என்று நினைக்கவேண்டும். ஏனெனில் இது எதற்கும் ஆத்மா. இதிலிருந்தே முன் ப்ராணன் வரையிலாகச் சொன்னவையும் மற்று மெல்லா முண்டாகின்றன. இவ்வாத்மோபாஸனம் பெற்றவன் கர்மங்களிலிருந்து விடுபட்டு எங்கும் இஷ்டப்படி ஸஞ்சரிக்கும் சக்தி பெறுகிறான். இவனுக்கு மரணம், ரோகம், துக்க மென்பவை கிடையா. எல்லாம் இவனுக்குப் போக்யமே யாம். இவன் எதையு மறிவான். ஆயிரக்கணக்கான உருவங்கள் எடுத்து ஆனந்திப்பான். இப்படிக் கொத்த பலனைப் பெறும் உபாஸனமானது மனது சுத்தமானால்தா னுண்டாம். மனது சுத்தமாவது சுத்தமான ஆஹாரத்தை உட்கொண்டால்தான்' என்றிவ்வாறு நிர்மல மனமுள்ள நாரத மஹர்ஷிக்கு ஸம்ஸாரத்தின் அக்கரையைக் காண வைத்தார் ஸநத்குமாரர். இவரை ஸ்கந்த ரென்றும் சொல்வதுண்டு.

8. 1–6. தஹரவித்யை. (दहरविद्या). ப்ரம்மபுர மெனப்படும் இந்த சரீரத்திலிருக்கும் புண்டரீகம் (தாமரைப்பூ) போன்ற சிறிய ஹ்ருதயத்திலே சிறிய வாகாச மிருக்கிறது. அதனுள்ளிருப்பதை யறிந்து உபாஸிக்க வேண்டும். இவ்வளவு சிறிய ஆகாசத்திற்கு முள்ளே என்ன விருக்கு மெனவேண்டா. வெளியிலுள்ள ஆகாசத்தைப் போலே அந்த ஆகாசமும் பெரிதானதே. கீழ் மேலுலகங்கள், அக்னி, வாயு, ஸூர்ய சந்திராதிகள் எல்லாம் இதிலிருக்கின்றன. உபாஸகனுக்கு இங்கே கிடைப்பதும் கிடைக்காததும் எதுவும் இதனையே ஆதாரமாக வுடையதாம். ஆனாலும் எல்லாம் அதிலிருந்தாலும், இந்த உடல் உரு குலைந்தும் அழிந்தும் போனால் ஹ்ருதய புண்டரீகம் போய் விடுமே. அப்போது அதை யாதாரமாக வுடைய இவ்வாகாசமும் அழிய வேண்டியதாயிருக்க என்ன அதற்கு மேலுண்டு என வேண்டா. உடலழிவதால் அது அழிவதில்லை. அது நிர்விகார ப்ரம்மம். அதற்கு உடல் புரமென்பது தத்துவமன்று. அதுதான் புரம். அதிலல்லவோ எல்லாம் குடிகொண்டிருக்கின்றன. இப்படிப்பட்ட ஆகாசத்தில் உள்ளே இருப்பன எவை என்னில் காமங்கள்: கல்யாண குணங்கள். அவை எட்டு. அதனால் அவனை அபஹதபாப்மா,

விஜா:, விம்ருத்யு:, விசோக:, விஜிகத்ஸ:, அபிபாஸ:, ஸத்யகாம:, ஸத்ய ஸங்கல்ப்ப: என்கிறது. உலகில் ஓர் அரசனை அண்டி சில கார்யங்களைச் செய்து இஷ்டமான பலன் பெறுவது போல் வேதத்தில் ஓதப்பட்ட சில கர்மங்களைச் செய்து புண்யபலன்களைப் பெறுகிறார்கள். அவை யெல்லாம் அழிந்துவிடும். ஆத்மாவையும் அதன் குணங்களையும் அறியாது இங்ஙனம் செய்வதால் யதேஷ்டமாய் இருக்க முடியாது. ஆத்மாவையும் அதன் குணங்களையும் உபாஸித்தவனுக்கு எல்லாப் பலன்களுமுண்டு. மோக்ஷம் பெற்றானாகில் நினைத்தபடியிருக்கலாம். தாய், தந்தை, ஸஹோதரன், ஸஹோதரி, தோழர்கள், ஸ்திரீகள், ஸுகவஸ்துக்கள் எல்லாத்துடன் இருக்க வேண்டும் என்று அவன் ஸங்கற்பித்துக் கொண்டால் அங்ஙனமே கூட அவன் இருக்கலாம். பரமாத்மாவினுடைய கல்யாண குணங்களை நாம் அறியாதது நமக்குள்ள அநாதி பாபத்தாலே. பூமிக்குள்ளே ஒவ்வோரிடத்தில் புதையலிருக்கிறது. அதன் மேலே எப்போதும் நடமாடி வந்தாலும் ஜனங்களுக்கு அது காண்கிறதில்லை. அது போல் ப்ரம்மமே நமக்குத் தெரியாமலிருக்கிறது. அவ்வாத்மா ஹ்ருதயத்திலிருக்கிறது. அது இருப்பதால் தான் இதற்கு ஹ்ருதயமெனப்பெயர். இந்த உபாஸகன் உடலினின்று பிரிந்த பிறகு பரஞ் சோதியை அடைந்து சுய ரூபத்தைப் பெறுகிறானென்கிறார்களே, அந்த பரஞ்சோதி இந்த ஆத்மாதான். இது அழிவும் பயமுமில்லாத ப்ரம்மம். இதற்கு ஸத்யம் எனப் பெயர். சேதநங்கள், அசேதநங்கள் எல்லாவற்றையும் ஆள்கிறதென ஸத்யபதத்தின் உட்பொருள். இது எல்லா உலகங்களையும் ஒன்றோடொன்று கலந்தழியாதபடி ஆங்காங்கு நிறுத்திக் காக்கிறது. ஆகவே ஸேது. இதனிடம் ஒரு தோஷமுமண்டாது. இதை யடைந்தவன் தாபத்ரயமும் நீங்கி ஸுகப்படுவான். கிடைத்த பிறகு இதற்கு அழிவு கிடையாது. ஒரு பகலாய் உணர்த்தியே யாம்.

இதைப் பெற ப்ரம்மசர்யம் வேண்டும். ப்ரம்ம சர்யத்தாலே ப்ரம்ம லோகத்திலுள்ள, அரமென்றும், ண்யம் என்றும் சொல்லப்படும் இரு சமுத்ரங்களையும், ஐரம்மதீயம் என்ற தடாகத்தையும், ஸோமஸவந மென்னும் அலச மரத்தையுங் கடந்து, அபராஜிதை யென்னும் ப்ரம்மத்தின் ராஜதானியிலே புகுந்து ப்ரபுவிமித மென்னும் அவன் எழுந்தருளி யிருக்கும் அழகிய ஸ்தானத்திலே சென்று ப்ரம்மாநுபவம் பெறுகிறான். ஹ்ருதயத்தில் எத்தனையோ நாடிகள் இருக்கிறன. அவற்றிற்கும் ஸூர்ய கிரணங்களுக்கும் ஸம்பந்தமுண்டு.

ஹ்ருதயத்திலுள்ள நூற்றொரு நாடிகளில் தலைப்பக்கம் சேர்ந்த தொரு நாடியின் வாயிலாகத் தலையைப் பிளந்துகொண்டு ஸூர்ய ரச்மி வழியாக ஸூர்ய மண்டலம் போய் மனோவேகமாக வைகுண்டம் போய்ச் சேர்ந்தால் முன் சொன்ன பலனெல்லாமுண்டு.

7–12. இனி இந்தப் பரவித்யைக்கு அங்கமாம் ப்ரஜாபதிவித்யை. ப்ரஜாபதி யென்பவர் தன் பிள்ளைகளான தேவாஸுரர்கள் க்ஷேமப் பட வேண்டுமென வாவல் கொண்டு கிருபையினால் வாக்ய மொன்றை உலகமெல்லாம் பரவவிட்டார். ஆத்மாவை அதன் எட்டு குணங்களோடு அறிந்தவனுக்கு ஸர்வ ஸுகமும் உண்டு என்பது அதினின்று விளங்கும்.

தேவர்களும் அஸுரர்களும் அதைக் கேட்டு அதன் பொருளை விரிவாக அறிய வாவல் கொள்ள, அத்தேவாஸுரர்களில் ப்ரதானரான இந்திரனும் விரோசனனும் ப்ரஜாபதியினிடமிருந்து அதன் பொருளைக் கற்க வந்து 32 - வருஷ காலம் ப்ரம்மசர்யத்துடனிருந்தார்கள். ப்ரஜாபதியும் இந்த ஆத்மா கண்ணில் தெரிகிறதென உபதேசித்தார். அப்போது ப்ரதிபிம்பம் தான் ஆத்மாவென்று அவர்கள் நினைத்துக் கொண்டு, கண்ணைவிட கண்ணாடியிலும் தண்ணீரிலும் நன்றாகத் தெரிகிறதே, அது தானே என்று கேட்டனர். அப்போது மடக்கில் ஜலம் வார்த்து நன்றாகப் பாருங்கள். நல்ல அலங்காரங்களையும் செய்துகொண்டும் பாருங்கள். ஏதேனும் தெரியாமலிருந்தால் கேளுங்கள் என்றார். பார்த்த பிறகு விரோசனன் இதுதான் ஆத்மாவென்று தீர்மானித்து அஸுரர்களுக்கு அதனையே உபதேசித்தான். அதனால் தேஹாத்ம வாதிகளானார்கள் அஸுரர்கள். இந்திரனுக்கு இதில் திருப்தி பிறக்கவில்லை. 'ப்ரதிபிம்பம் பிம்பத்தைப் போலாகிறது. பிம்பத்திற்குக் கோலம் செய்யாது குரூபமாக்கினால் ப்ரதிபிம்பமும் அங்ஙனமாம். இது ஆத்மாவாகுமா' என ஆலோசித்து மறுபடியும் வந்தான். படிப் படியாக ஸ்வப்நாவஸ்தையிலுள்ள ஆத்ம ஸ்வரூபம், தூக்கத்திலுள்ள ஆத்ம ஸ்வரூபம் இவற்றை உபதேசித்தார். அங்கங்கு கஷ்டமும் அஜ்ஞானமுமிருப்பதாலே இந்திரன் திருப்தியடையவில்லை.

கடைசியாக மொத்தம் 101 - வருஷ ப்ரம்மசர்யமான பிறகு, 'தஹரவித்யையில் எம்பெருமானுக்குச் சொன்ன எட்டு குணங்களும் இவனுக்குண்டு. உடலினின்று கிளம்பி உத்தம புருஷனைச் சேர்ந்து

